# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## I. சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2 | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7 | *தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| *9. | அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச், உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீ கிருஷ்ணசரித்திரவிமர்சம் ... | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

ஸ்ரீ:

# அமிர்தரஞ்ஜநி

[22-ஆம் பாசுரவுரை.]



இது

மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப்பத்திராசிரியர்

**திரு. நாராயணையங்காரால்**

எழுதப்பெற்றது.




செந்தமிழ்ப்பிரசுரம்—கூஎ.

மதுரைத்தமிழ்ச்சங்க முத்திராசாலை,

மதுரை.

1939

இதன் விலை அணா — 2.

ஸ்ரீ:

# பிழையும் திருத்தமும்.

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 3 | வாகாக காதலியும், | வாகாக யஜ்ஞத்துக்குரிய காதலியும், |
| 24 | 16 | சூடியவெண்மதி என்பதற்கு, | சூடியவெண்மதி காதலியாம் என்பதற்கு, |
| 32 | 3 | இதனை, | காமாதிகள் யஜ்ஞவிரோதிகளா மென்பதனை, |

ஸ்ரீ:

# அமிர்தரஞ்ஜநி.

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ॥

கவிதார்க்கிககேஸரி என்றும், ஸ்ரீவிசிஷ்டாத்வைதஸித்தாந்த ப்ரவர்த்தகரென்றும் கொண்டாடப்பெற்ற ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகரால் அருளிச்செய்யப்பட்ட தமிழ்ப்பிரபந்தங்களுள் அமிர்தரஞ்ஜநியும் ஒன்று. இது,

'சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் — ஓரொன்று
தானே அமையாதோ தாரணியுள் வாழ்வார்க்கு'

என ஆன்றோரால் புகழ்ந்துரைக்கப்பெற்ற பெருமையுடைய தேசிக ப்ரபந்தத்தின் ஒரு பகுதியாயுள்ளது.

இதனால், தாரணியுள் வாழ்வார்க்கு, அவர் வாழ்க்கையாகிய [1]காலக்ஷேபத்துக்கும் [2]போகத்துக்கும் [3]ஸ்வரூபப்ராப்திக்கும் இதில் உள்ள ஓரொரு [4]பாசுரமே அமையும் என்பது போதரும்.

இதற்கு [5]நிதர்சனமாகும்படி அவ்வமிர்தரஞ்ஜநியிலுள்ள ஒரு பாசுரத்தின்பொருள் இங்கு நிரூபிக்கப்பெறுகிறது.

அப்பொருள், வடநூல்வழக்குப்பற்றிய சமயக்கோட்பாடான பரிபாஷைகளால் வழங்கப்படுதலால் தனித்தமிழ்நடையில் வரைதல் எல்லோர்க்கும் பயன்படாதென்பதுபற்றியும், வடமொழி வல்லார்க்கும பயன்படவேண்டியும் வரன்முறையான மரபுபற்றி, வடமொழிவிரவிய தமிழ்நடையால் வரையப்பெறுகிறது.

[1] காலக்ஷேபம்-மனம் தீயவழியிற்செல்லாது நல்லவழியிற்செல்லுமாறு பொழுதுபோக்குகை.

[2] போகம் - 'செஞ்சொற்கவியின்ப' நுகர்ச்சி.

[3] ஸ்வரூபப்ராப்தி - ஆன்மலாபம்.

[4] பாசுரம் - பாட்டு.

[5] நிதர்சனம் - எடுத்துக்காட்டு.

அப்பாசுரம்,

‘செய்யேல் மறம்’ என்று தேசிகன் தந்த அவன் உரைத்த
மெய்யே அருள் பொருள் தூய வெண்மதி காதலியாம்
பொய்யே பகைப்புலன் ஐயிரண்டோறு பொருங்கருவி
கையேறு சக்கரக் காவலன்காவலடைந்தவர்க்கே.

என்பது.

இதன் [1]அந்வயம் வருமாறு:—

இதில், மெய்யே என்பதில் உள்ள ஏகாரத்தை அருள் என்பதனோடும் கூட்டி, ‘மெய்யே அருளே பொருள்’ என முடிக்க.

‘காதலியாம்’ என்பதில் உள்ள பயனிலைக்குறிப்பான ‘ஆம்’ என்பதை, ‘பொருள்’, ‘பகைப்புலன்’, ‘பொருங்கருவி’: என்பவற்றோடும் கூட்டுக. இவை ‘காவலன்காவலடைந்தவர்க்கு’ என்னும் நான்கனுருபுக்குப் பயனிலையாயின.

தேசிகன் தாதை அவன்: என்னும் பெயடுக்கைப் பிரித்து, உரைத்த என்பதனோடு தனித்தனிகூட்டித் தேசிகனுரைத்த, தாதையுரைத்த, அவனுரைத்த: என்று முடித்து, அந்த ‘உரைத்த’ என்னும் பெயரெச்சத்தை மெய், அருள், வெண்மதி, பொய், ஐயிரண்டோன்று: என்பவற்றோடு தனித்தனி கூட்டியுரைக்க.

இனி இப்பாசுரார்த்தம் வருமாறு:—

இப்பாசுரத்தால் [2]ப்ரபந்நாநுஷ்டாநம் ஒரு [3]யஜ்ஞரூபமாக வர்ணிக்கப்படுகிறது.

இதன் பிண்டப்பொருள், “எம்பெருமானே [4]ரக்ஷகனென்று அவனையே பற்றியிருக்கும் ப்ரபந்நரொருவரும் பாபம்செய்யலாகாதென்பதைத் திருவுள்ளம்பற்றி, அவருக்குப் பரமாசார்யனும்

---

[1] அந்வயம் - சொன்முடிபு.

[2] ப்ரபந்நன் - இறைவனிடத்தில் ‘தன்கடன் அடியேனையும் தாங்குதல், என்கடன் பணிசெய்து கிடப்பதே’ என்றிருப்போன்; அநுஷ்டாநம் - ஒழுக்கம்.

[3] யஜ்ஞரூபம் - வேள்விவடிவு.

[4] ரக்ஷகன் - காப்போன்.

பரமபிதாவாயும் பரமரக்ஷகனுயும் உள்ள ஸர்வேசுவரன் சொல்லிய தத்வதர்சநம் சமதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாம், அவர்செய்யும் ப்ரபந்நாநுஷ்டாநமாகிய [1]நிஷ்காம்யயஜ்ஞவிசேஷத்துக்கு யஜ்ஞ[2]உபகரணங்களாகிய பதார்த்தவிசேஷங்களாம்; பகவச்[3]சேஷத்வ[4]விசிஷ்ட பரிசுத்தாத்மதர்சநரூபமான ஜ்ஞாநவிசேஷம் யஜ்ஞகர்த்தாவின் [5]தர்மபத்நியாம்; பொய்யாகிய [6]அஜ்ஞாந [7]அந்யதாஜ்ஞாந [8]விபரீதஜ்ஞாநங்கள், ஆத்மஜ்ஞாநமாகிய இந்த யஜ்ஞபத்நியை மறைத்து ஒளித்து, அந்த யஜ்ஞோபகரணங்களாகிய ப்ரபந்நாநுஷ்டாநங்களைப்போக்கி, யஜ்ஞத்தைக் கெடுக்கவல்ல காமாதி [9]ஹேயகுணங்களாகிய விரோதிகளுக்கு இடங்கொடுக்கும் பகைப் புலமாம்; அப்பகை தோன்றிய இடத்தில் அப்பகையை அழித்தற்கு [10]ரஹஸ்யத்ரயாநுசந்தாநம் போர்ப்படையாம்" என்பது.

இனி இதன் விரிவுரை வருமாறு:—

'கையேறுசக்கரக்காவலன்' என்றது [11]ஆசிருதஸம்ரக்ஷணத்தில் ரக்ஷகனுக்குள்ள [12]ஜாகரூகத்வம் சொல்லியதாம்.

---

1 நிஷ்காம்யம் - பயன்கருதாதது.

2 உபகரணம் - சாதநம்.

3 சேஷத்வம் - உடையோனிடம் ஒன்றுமாகாது வேறுமாகாது ஒன்றுயும் வேருயும் ஒருபுடையொற்றுமையுடனிருக்கை. அது உடைமை எனப்படும்.

4 விசிஷ்டம் - கூடியது.

5 தர்மபத்நி - அறக்கிழத்தி.

6 அஜ்ஞாநம் - அறியாமை.

7 அந்யதாஜ்ஞாநம் - ஒன்றைப் பிறிதொன்ருக அறிதல்.

8 விபரீதஜ்ஞாநம் - ஒன்றனை அதன் மறுதலைப்பொருளாக உணர்தல்.

9 ஹேயகுணம் - இழிகுணம்.

10 ரஹஸ்யத்ரயாநுசந்தாநம் - மூன்றுமந்திரங்களையும் இடையருது சிந்தித்தல். ரஹஸ்யம் - மந்திரம்; த்ரயம் - மூன்று; அவை திருமந்திரம், த்வயம், சரமசுலோகம் என்பன. அநுசந்தாநம் - இடையருது வழங்குதல்.

11 ஆசிருதஸம்ரக்ஷணம் - அடைந்தோர்ப்புரத்தல். ஆசிருதர் - அடைந்தோர். ஸம்ரக்ஷணம் - காப்பு.

12 ஜாகரூகத்வம் - எதிர்நோக்கியிருத்தல்.

அன்றியும், 'சக்கரக்காவலன்' என்ற இதுவே சக்ரவர்த்தியான ஸார்வபௌமன் என்னுங் கருத்தால் ஸர்வேசுவரனைச் சொல்லிற்று என்னவுமாம். இது, [1]நியாமகத்வ த்யோதகம்.

'காவலன்' என்றது ரக்ஷணகர்த்தா என்றபடி. ரக்ஷண[2]க்ரியைக்கு உரிய விஷயம் இன்னதென்று சொல்லப்படாமையால் ஸர்வரக்ஷகன் என்பது பொருளாயிற்று.

'காவலன்' என்ற இதனால், இவன் மற்ற [3]ஸ்ருஷ்டி [4]ஸம்ஹாரங்களையும் உடையவனானாலும் [5]அநிஷ்டமாயுள்ள அவற்றைப் பிறர் செய்யும்படிவிட்டு [6]ஸர்வாத்மாக்களுக்கும் [7]அத்யந்தம் [8]இஷ்டதமமான ரக்ஷணத்தைமட்டும் தானே [9]அத்வாரகமாகச் செய்து போதருமவன் என்பது குறிப்பாயிற்று. இது அவனுக்குள்ள [10]ஸௌஹார்த்தத்தைக் காட்டுகிறது.

காவல்—ரக்ஷணம். அதாவது [11]ரக்ஷ்யவர்க்கங்களின் [12]விரோதியைப்போக்குகையும் வாழ்விக்கையும்.

'சக்கரக்காவலன்' என்றது ரக்ஷணகர்த்தாவான தானே ரக்ஷணத்தில் ஜாகரூகனாயிருக்கச்செய்தேயும் ஆச்ருதவிரோதிகளை அழிக்கைக்குக் கைக்கொண்டிருக்கும் [13]'ஸுரத்விஷாம் ப்ராணவிநாச' ஹேதுவான [14]ஸாதநமிருக்கும் இருப்புச் சொல்லியபடி.

---

[1] நியாமகத்வம் - கட்டளையிடுகை; த்யோதகம் - குறிப்பு.

[2] க்ரியை - செயல்.

[3] ஸ்ருஷ்டி - படைப்பு.

[4] ஸம்ஹாரம் - அழிப்பு.

[5] அநிஷ்டம் - விரும்பத்தகாதது.

[6] ஸர்வாத்மாக்களுக்கும் - எல்லாவுயிர்க்கும்.

[7] அத்யந்தம் - மிகவும்.

[8] இஷ்டதமம் - விரும்பப்படுமவற்றுட்சிறந்தது.

[9] அத்வாரகமாய் - வாயிலாலன்றி - தானேநேராய்.

[10] ஸௌஹார்த்தம் - நல்லெண்ணம்.

[11] ரக்ஷ்யவர்க்கம் - பாதுகாக்கப்படுமவை.

[12] விரோதி - பகை.

[13] ஸுரத்விஷாம்ப்ராணவிநாசஹேதுவான - தேவ விரோதிகளான அசுரருயிரழிகைக்குக்காரணமான.

[14] ஸாதநம் - கருவி.

இன்னும் இது தானே 'பாஸ்கரகோடிதுல்யம்' என்று சொல்லப்பட்டமையால் வாழ்வளிக்கைக்குப் புறவிருளைப்போக்கும் ஒரு பாஸ்கரனைப்போலன்றிப் பலகோடிபாஸ்கரர் உதித்தாற்போலுள்ள [1] திவ்யதேஜஸ்ஸைக்கொண்டு அகவிருளாகிய அஜ்ஞாநத்தையும் அழிக்கவல்லது என்பதும் ஆயிற்று. இவை பொருட்குறிப்பாற் கொள்ளப்பட்டன.

இவற்றால்; புறப்பகை அகப்பகை: இரண்டையும் ஒழிக்க வல்ல படைக்கலம் என்பது குறிப்பாயிற்று.

'கை' என்றது இங்கே [2] அர்த்தசக்தியாலே [3] ஆர்த்தர்களுக்கு விரோதிகளைப்போக்கி வாழ்வளிக்கவல்ல வலத்திகழ்திருக்கை என்றவாறு. இதுவும் ரக்ஷகத்வ [4] சூசகமாயிற்று.

'கையேந்துசக்கரம்' என்னாது, 'கையேறுசக்கரம்' என்றது ரக்ஷணத்தில் காவலனிலும் சாதரம் முற்பட்டிருக்கும் இருப்புச் சொல்லியபடி. இதனை, பாரதயுத்தத்தில் படையெடேனென்று சபதம்செய்து படையொழிந்துபோந்த அவன்கையில் அது தானே வந்தேறியதுகொண் டறியலாம்.

இவற்றால் அவனை அடைவார்க்கு ரக்ஷணம் ஒருவிதத்தாலும் தவறாது என்பதாம்.

'காவலன்' என்றதன் சப்தார்த்தசக்தியாலே ரக்ஷ்யகோடிகள் [5] அவிநாபாவசம்பந்தம்பெற்று அவனையடைந்திருக்கை சித்தமாம் என்பது தெரியச்செய்தே, பின்னும், 'காவலன்காவலடைந்தவர்க்கு' என்றது [6] வ்யதிரேகலக்ஷணையாலே [7] ஸ்வரக்ஷணத்தில் [8] ஸ்வப்ரவ்ருத்தியைவிட்டு [9] நிர்ப்பரராயிருக்கும் ப்ரபந்நர்க்கு என்றவாறாயிற்று. இதுவே [10] அநந்யகதித்வசூசகமுமாம்.

---

[1] திவ்யதேஜஸ் - தெய்வத்தன்மையுள்ள ஒளி.

[2] அர்த்தசக்தி - பொருட்குறிப்பு.

[3] ஆர்த்தர் - துன்புற்றோர்.

[4] சூசகம் - குறிப்பு.

[5] அவிநாபாவசம்பந்தம் - இன்றியமையாத்தொடர்பு.

[6] வ்யதிரேகலக்ஷணை - மறுதலைக்குறிப்பு.

[7] ஸ்வரக்ஷணம் - தற்காப்பு.

[8] ஸ்வப்ரவ்ருத்தி - தன்முயற்சி.

[9] நிர்ப்பரர் - பொறுப்பற்றவர்.

[10] அநந்யகதித்வம் - புகல்வேறின்மை.

இதற்கு இவ்வாறாக அர்த்தங்கொள்ளாக்கால், காவலன்காவல் என்றது [1]உக்தார்த்தப்ரயோகமும், [2]ஆத்மாசிரயமுமாம்.

இங்கு, காவலன்காவலடைதலாவது: 'தன்காவலை விட்டிருக்கை' என்றபடி. இது ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரவ்ருத்தியையுமுடைய [3]சாதநாந்தரபரரை [4]வ்யாவர்த்திக்கிறது.

ஸாதநாந்தரபராவார்,

[5]ப்ரயத்நாத்யதமாநஸ்து யோகீ ஸம்ஶுத்தகில்பிஷ: ।
அநேகஜந்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம் ॥

என்று சொல்லப்பட்டவர்.

இதனால் இங்கு [6]வக்தவ்யங்களாயுள்ள அர்த்தவிசேஷங்கள் சாதநாந்தரபரரைநோக்கிச்சொல்லியவையல்ல என்பதாம்.

'செய்யேல் மறம் என்று தேசிகன் தாதை அவன் உரைத்த மெய்யே அருளே பொருளாம்' என்றது, 'ப்ரபந்நனுயுள்ளவனொருவனும் பாபம் செய்யலாகாது' என்னும் அர்த்தத்தையுட்கொண்டு, பரமாசார்யனும் பரமபிதாவும் ஸர்வரக்ஷகனுமான ஸர்வேசுவரன் சொல்லிய தத்வதர்சநமும் ஸமதர்சநமும் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாம் ப்ரபந்நாநுஷ்டாநமான நிஷ்காம்யயஜ்ஞ விசேஷத்துக்கு யஜ்ஞோபகரணங்களான பதார்த்தவிசேஷங்களாம்: என்றவாறு.

'[7]த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச மித்ராணி ச தநாநி ச,'

---

[1] உக்தார்த்தப்ரயோகம் - கூறியதுகூறல்.

[2] ஆத்மாசிரயம் - தன்னைப்பற்றுதல் என்னும் குற்றம்.

[3] சாதநாந்தரபரர் - பிறிதோருபாயத்தைக் கைக்கொண்டவர்.

[4] வ்யாவர்த்தித்தல் - விலக்குதல்.

[5] இதன்பொருள் - 'தன்முயற்சியால் (பரகதி) அடையவிரும்புமவன் ஜ்ஞாநத்தால் பாபங்களைப்போக்கிக்கொண்டு பல பிறப்புக்களால் ஆத்மஸாக்ஷாத்காரமாகிய தன்னிலையடைந்து அதனால் பரகதியையடைகிறான்' என்பது.

[6] வக்தவ்யம் - சொல்லற்குரியது.

[7] இ - ள். 'மக்களையும் மனைவியையும் நண்பினரையும் பொருளையும் கைவிட்டு' என்பது.

என்றும், [1]'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்றும் சொல்லுகிறபடியே [2]ஸர்வஸங்கபரித்யாகம்பண்ணிவந்தடைந்த இவனுக்கு, உரியன வாகாத காதலியும், பொருளும், பகைப்புலமும், அதனை ஒழித்தற் குரிய போர்ப்படையும் ஆகிய இவை உள்ளனவாகச் சொல்லப் பட்டமையால் அவை யஜ்ஞாங்கங்களாய் இவ்வநுஷ்டானம் யஜ்ஞ [3]ஸமாதியால் சொல்லப்பட்டதென்று தோற்றுவிக்கின்றன.

பாபகர்மம் வேதாதிசாஸ்த்ரங்களால், செய்யலாகாதென்று மறுக்கப்பட்டமையால் அது மறம் (நிஷித்தகர்மம்) என்று சொல்லப்பட்டது. இது, மறம்செய்யேல் என மாறிநின்று [4]வசந வ்யத்யயத்தாலே பாபம் செய்யலாகாது என்னும் அளவாய் [5]ப்ரதி ஷேதவிஷயமாயிற்று.

ஆனால் இவனுக்கு, [6]விஹிததர்மங்களும் பொன்விலங்கு போலே [7]பந்தகமேயாவதாகையாலே அதனையும் இங்குச் செய்யலாகா தென்று சொல்லாதது, ஸர்வதர்மபரித்யாகம்பண்ணிவந்தடைந்த இவனுக்கு அது பின்னும் சொல்லவேண்டாவென்பதுபற்றியென்க.

ஆனால் இவன் பாபம் செய்யலாகாதென்னும் அபிப்ராயத்தை மட்டும், தேசிகனும் தாதையும் அவனுமாயிருப்பவன் உட்கொள்ளு தற்கு அடி என்னெனில், [8]'ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்று தான் சொல்லியிருப்பதுபற்றி, இவனுக்கு [9]உத்தராகம் புகுதராமல் இவன் ஸ்வரூபத்தைக் காப்பதும் தன்கடனும்: என்று

---

[1] இதன் பொருள். 'எல்லாத் தர்மங்களையும்விட்டு' என்பது.

[2] ஸர்வஸங்கபரித்யாகம் - உடம்போடுண்டாகிய தொடர்பெல்லாம் விடுகை.

[3] ஸமாதி-ஒன்றன் தர்மத்தைப் பிறிதொன்றன்மேலேற்றிக்கூறுதல்.

[4] வசனவ்யத்யயம் - பால்மயக்கம்.

[5] ப்ரதிஷேதம் - மறுப்பு.

[6] விஹிதம் - விதிக்கப்பட்டது.

[7] பந்தகம் - கட்டு.

[8] இ - ள். 'எல்லாப் பாவங்களினின்றும் (உன்னை) விடுவிப்பேன்' என்பது.

[9] உத்தராகம் - ப்ரபத்திபண்ணினபின் சேதநனுடைய சோர்வினால் வரக்கடவ பாபம்.

திருவுள்ளம்பற்றி அவ்வுத்தராகம் [1]ப்ரஸங்கிக்க இடந்தராதிருக்க விரும்புகை. இதனால் இவன் பாபம் செய்யாதிருக்கை அவன் கார்யமாய் அவனுக்கு [2]இஷ்டபலமாயிற்று; இது [3]ஸித்திக்கைக்கு இவன் செய்துபோதரும் ப்ரபந்நாநுஷ்டாநம் ஸாதநமாயிற்று.

'என்று' என்னும் [4]அநுகாரத்யோதகம், "அஞ்சல் என்ற கரதலம்" என்பதிற்போல இங்கு அர்த்தபரமாய்ப் 'பாபம்செய்யலாகாது' என்ற அர்த்தத்தை உட்கொண்டு: என்னும் பொருளுணர்த்துகிறது. இதற்கு 'உரைத்த' என்பதனோடு அந்வயம்.

இங்கு 'என்று' என்ற அநுகாரதாற் சொல்லியபொருள் மறம்செய்யாமையும், உரைத்த பொருள் தர்மரூபமான மெய் அருள் முதலிய ப்ரபந்நாநுஷ்டாநங்களுமாக வேறுவேறாயிருத்தலால் இவ்வாறு (மறஞ்செய்யலாகாதென்னும் பொருளையுட்கொண்டு என்று) பொருள்கொள்ளப்பட்டது.

இதனால், அவனுக்குப் பலமாய், அவனால் உட்கொள்ளப்பட்டதான மறஞ்செய்யாமைக்கு உபாயமாக, அவனால் உரைக்கப்பட்டன பின் வரும் ப்ரபந்நாநுஷ்டாநங்கள்: என்பது பொருளாம்.

இங்கு எம்பெருமானைத் தேசிகன் என்றது, அவன் தானே பரமாசார்யனாய்நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டநிலையைச் சொல்லியபடி; அன்றியும், பெரியபிராட்டியார்வாயிலாக த்வயத்தை உபதேசித்திருக்குமிருப்பைச்சொல்லியதென்னவுமாம்; அன்றியும், கீதாசார்யனாய், [5]சரமோபாயத்தை வெளியிட்டநிலையைச் சொல்லியதென்னவுமாம்.

இதனால் அவனுக்கும் இவனுக்கும் உள்ள ஆசார்ய சிஷ்ய ஸம்பந்தம் சொல்லிற்றாயிற்று. இதனால், அவன் சொல்லியபடி இவன் செய்கை [6]ப்ரீதிகாரிதகைங்கர்யமென்பதாயிற்று.

---

[1] ப்ரஸங்கிக்க - தொடர.

[2] இஷ்டபலம் - விரும்பியபயன்.

[3] சித்திக்கை - பெறுகை.

[4] அநுகாரத்யோதகம் - கொண்டுகூற்றுக்குறிப்பு.

[5] சரமோபாயம் - முடிவான வீட்டுநெறி.

[6] ப்ரீதிகாரிதகைங்கர்யம் - ஆசைப்பட்டுச்செய்யும் அடிமைப்பணி.

'தாதை' என்றது [1]'𑌅𑌹𑌂 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾' என்றும், [2]'𑌪𑌿𑌤𑌾𑌹𑌮𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃' என்றும் அவன் தானே சொல்லியபடி, ஸகலஜகத்துக்கும் பரமபிதாவாய்நிற்கும் நிலையைச் சொல்லிற்று.

இதனால் அவனுக்கும் இவனுக்குமுள்ள பிதாபுத்ரசம்பந்தம் சொல்லிற்றாயிற்று. இதுவும் ப்ரீதிகாரிதகைங்கர்ய த்யோதகம்.

'அவன்' என்றது [3]பூர்வபராமர்சத்யோதகமாய் 'கையேறு சக்கரக்காவலன்' என்று இப்பாசுரத்துட் சொல்லப்பட்ட ஸர்வ ரக்ஷகனை ஸர்வேசுவரனைச் சொல்லிற்று.

இதனால் இவனுக்கும் அவனுக்குமுள்ள [4]ரக்ஷ்யரக்ஷக ஸம்பந்தம் சொல்லியபடி. இதுவும் அவன்சொல்லியபடி இவன்செய்கை ப்ரீதிகார்யம் என்பதைக் காட்டுவதாயிற்று.

இந்த மூன்றுவகையான ஸம்பந்தமும் சொல்லியது அவனுக்குள்ள ஏற்றம் தோற்றும் [5]குணக்ருததாஸ்யக்குறிப்பாயிற்று.

தேசிகன், தாதை, அவன்: என்னும் பெயரடுக்கு, [6]கர்த்ருக்ரியா ஸம்பந்தத்தால் உரைத்த என்னும் பெயரெச்சவினையோடு அந்வய மாய், அப்பெயரெச்சவினை, [7]க்ரியாகர்ம ஸம்பந்தத்தால் மெய், அருள், (சூடிய) வெண்மதி, பொய், ஐயிரண்டொன்று: எனப் பின் வரும் வாக்கியங்களிலுள்ள [8]உத்தேசியகோடியில் அந்வயிக்கிறது.

---

[1] இதன்பொருள். 'நான் உயிர்ப்பயிர்விளைப்பதற்கு விதைவிதைப் பவனுதலால் தந்தையாகிறேன்' என்பது.

[2] இ - ள். 'இந்த உலகுக்கு நான் தந்தையாயிருக்கிறேன்' என்பது.

[3] பூர்வபராமர்சம் - பண்டறிசுட்டு.

[4] ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தம் - பாதுகாத்தற்குரியனும் பாதுகாப்பவனும் ஆகிய இயைபு.

[5] குணக்ருததாஸ்யம் - குணத்தால் ஈடுபட்ட குற்றேவல்.

[6] கர்த்ரு க்ரியா ஸம்பந்தம் - செய்பவனும் செயலும் ஆகிய இயைபு.

[7] க்ரியா கர்ம ஸம்பந்தம் - செயலும் செயப்படுபொருளும் ஆகிய இயைபு.

[8] உத்தேசியகோடி - எழுவாய்வரிசை.

'மெய்' என்றது ஸத்யம். அது சப்தவிஷயமாகவும், அர்த்த விஷயமாகவும், ஜ்ஞாநவிஷயமாகவும் வழங்கப்படுமாயினும், அவற்றுள் இங்கு ஜ்ஞாநவிஷயமாய்நின்று மெய்யுணர்வு என்னும் தத்வ தர்சநத்தைச் சொல்லுகிறது.

அவனுரைத்த தத்வதர்சநமாவது: ப்ரக்ருதி புருஷ ஈசுவரரூபமான தத்வத்ரயத்தை உள்ளபடி அறிகை.

அவற்றுள், ப்ரக்ருதிதத்வமாவது:

[1]'இத³ம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபி⁴தீ⁴யதே'

என்று சொல்லப்பட்ட சரீரரூபமாயுள்ளது. இது, 'பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம்............பிரகிருதி மான்ஆங்காரம் மனம்' என்று சொல்லப்பட்ட இருபத்துநான்கு வகையின் [2]ஸமூஹமாயுள்ளது.

[3]'பூ⁴மிராபோऽநலோ வாயு: க²ம் மநோ பு³த்³தி⁴ரேவ ச।
அஹங்கார இதீயம் மே பி⁴ந்நா ப்ரக்ருதிரஷ்டதா⁴॥'

என்று, இது அவனாலே [4]ஸங்க்ரஹித்துச்சொல்லப்பட்டது. "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்—வகைதெரிவான் கட்டே யுலகு" என்பதும் இதுபற்றி வந்தது. 'மஹாபூ⁴தாந்யஹங்கார:' என்று தொடங்கி இவற்றோடு இன்னும் சில கூட்டி வேறுவகையாகவும் சொல்லப்படும்.

[1] இதன்பொருள். 'அர்ஜுனா! இந்த உடல் உயிர்ப்பயிரின் வினைப் பயன்விளைநிலம் என்று சொல்லப்படுகிறது' என்பது.

[2] ஸமூஹம் - கூட்டம்.

[3] இதன்பொருள்: 'பூதமைந்தும் மனமும் புத்தியும் அகங்காரமும் ஆகிய இவையெட்டும் என்னுடைய மூலப்பகுதியின் வேறுபாடுகளாம்' என்பது.

[4] ஸங்க்ரஹித்துச்சொல்லல் - சுருங்கக்கூறல். அதாவது, (பூதங்கள் ஐந்தும், அவற்றின் புலன்கள் ஐந்தும், அவற்றின் பொறிகள் ஐந்தும், கருமேந்திரியங்களைந்தும் பூதங்களில் அடங்கக்கூறி, மூலப்ரகிருதியையும் இவற்றின் மூலகாரணமாகவைத்து இவற்றுள் அடங்கக்கூறினமையாம்.

புருஷதத்வமாவது:

[1]'ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித:'

என்று அவனாற் சொல்லப்பட்டதாய் அநேகமாய் ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறாய் [2]ஜ்ஞாதாவாய் [3]வர்த்திக்கும் ஆத்மஸ்வரூபமாம்.

பின் ஸர்வக்ஷேத்ரவர்த்தியாக ஈசுவரதத்வம் சொல்லப்படுவதால், இங்குச் சொல்லிய ஜீவாத்மா [4]ஏகைகக்ஷேத்ரவர்த்தியாய்ப் [5]பஹுவாயிருக்குமென்பது பெறப்பட்டது.

ஈசுவரதத்வமாவது:

[6]'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத'

என்று அவனாற் சொல்லப்பட்டதாய், ஏகமாய் [7]ஸர்வஜ்ஞதையோடு கூடி ஸர்வசரீரத்திலும் வர்த்திக்கும் பரமாத்மஸ்வரூபமாம்.

இம்மூன்று தத்வங்களையும் உள்ளபடி அறிகையே தத்வத்ரய ஜ்ஞாநமாம். இது,

[8]'க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞாநம் யத்தஜ்ஜ்ஞாநம் மதம் மம'

என்று அவனுக்கு [9]அபிமதமான தத்வதர்சநமாகச் சொல்லப்பட்டது. இதுவும் அவனாற் சொல்லப்பட்டமையால் **தேசிகனும் தாதையுமான அவன் உரைத்த மெய்யுணர்வாயிற்று.**

---

[1] இதன்பொருள். '(அறிவில்லாத) இந்தச் சரீரத்தை அறிவது யாதோ அதை (அந்தப் புருஷதத்வத்தை) ஜ்ஞாநிகள், க்ஷேத்ரஜ்ஞனென்று சொல்லுகிறார்கள்' என்பது.

[2] ஜ்ஞாதா - அறிபவன்.

[3] வர்த்தித்தல் - இருத்தல்.

[4] ஏகைகக்ஷேத்ரவர்த்தி - ஒவ்வொரு சரீரத்திலும் தனித்தனி யிருப்பது.

[5] பஹு - பல.

[6] இதன்பொருள். 'அர்ஜுநா! என்னையும் எல்லாக்ஷேத்ரங்களிலும் இருக்கும் க்ஷேத்ரஜ்ஞனாகவும் அறிவாயாக' என்பது.

[7] ஸர்வஜ்ஞதை - முற்றறிவு.

[8] இதன்பொருள். 'க்ஷேத்ரங்களையும் க்ஷேத்ரஜ்ஞர்களையும் அறியும் அறிவு எதுவோ அதுவே எனக்கு உடன்பாடான ஞானமாம்' என்பது.

[9] அபிமதம் - உடன்பாடு.

அன்றியும்,

[1]'𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ।
𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿 ॥'

என்பதால் தத்வதர்சிகளாற் சொல்லப்படும் ஜ்ஞாநத்தில் விஷயமாகும்படி 'பூதாநி' என்று ப்ரக்ருதியையும், 'ஆத்மநி' என்று புருஷனையும், 'மயி' என்று ஈசுவரனையும் அவன் தானே சொல்லியிருப்பதாலும் இந்தத் தத்வத்ரயதர்சநரூபமான ஜ்ஞாநமே மெய்யுணர்வாகக் கொள்ளத்தக்கதாயிற்று.

இது, அமாநித்வம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். (இதனைப் பின்பு நிரூபிக்கலாகும்).

இப்படியுள்ள தத்வத்ரயத்தை உள்ளபடி அறிகையாகிய தத்வதர்சநத்தாலே, [2]அநாத்யவித்யாவாஸனையால் வந்துள்ள [3]தேஹாத்மப்ரமம், [4]ஸ்வஸ்வாதந்த்ர்யபுத்தி முதலான அஜ்ஞாநங்கள் நீங்குமாதலால், அவற்றினடியாக வரக்கடவ பாபங்கள் வாராதொழியுமென்பது கருதி, இத்தத்வதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாம், இவன் பாபம் செய்யலாகாதென்பதற்கு உபாயமாகச் சொல்லப்பட்டன.

இதனால் இவன் பாபஞ் செய்யலாகாது என்னும் [5]இஷ்டஸித்தி அவனுக்கு உண்டாகிறது.

ஆனால், இவன் பாபம் செய்யாமைக்கு, இவன் செய்யும் தத்வதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாம் இவன் செய்யும்

---

[1] இதன்பொருள். 'அர்ஜுனா! எந்த ஜ்ஞாநத்தினால் பூதப்பொருள் (உண்மைப்பொருள்)களையெல்லாம் உன்னிடத்திலும் என்னிடத்திலும் காண்பாயோ அந்த ஜ்ஞாநத்தைத் தத்வதரிசிகளான ஜ்ஞாநிகள் உனக்கு உபதேசிப்பார்கள்' என்பது.

[2] அநாத்யவித்யாவாசனையால்வந்த - அறியாமையடியாகத் தொன்று தொட்டு வந்த.

[3] தேஹாத்மப்ரமம் - உடலை யானென மயங்கும் மயக்கம்.

[4] ஸ்வஸ்வாதந்த்ர்யபுத்தி - தனக்குத் தானே உரியனென்றெண்ணுகை.

[5] இஷ்டஸித்தி - விரும்பியதுபெறுகை.

[1]ஸாதநாநுஷ்டாநமாகாதோவென்னில், ஆகாது; இவனுக்கு [2]இஷ்டாநிஷ்டங்களிரண்டும் இல்லாமையாலும், ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரவ்ருத்தியில்லாமையாலும் இவன் புத்தியாலே இஷ்டபலஸித்தி இல்லையாம். இஷ்டபலஸித்தி இல்லையாகவே இவனுக்கு ஸாதநாநுஷ்டாநமும் இல்லை என்பதாயிற்று.

இஃதென்போலவென்னில், பகவானுக்கிஷ்டமான பத்மாஸுர சரீரவியோகமுண்டாகவேண்டி, பகவான் அவனை ஆசமனம்பண்ணிவரச்சொன்னதுபோலே, இவனிடத்தில் பாபம் புகுதாதொழிய வேண்டித் தத்வதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநம் சொல்லியதென்க.

பத்மாஸுரன் செய்த ஆசமநம் அவனுக்கிஷ்டமான சத்ருநாசத்துக்கு ஸாதநமாகாது, பகவானுக்கிஷ்டமான பத்மாஸுர சரீரவியோகத்துக்கு ஸாதநமானதுபோலே, இவன்செய்யும் அநுஷ்டாநங்கள் இவனுக்கு இஷ்டஸாதநமாகாது, அவனுக்கு இஷ்டமான இவனிடம் பாபம் புகுதாமைக்கு உபாயமாகுமத்தனை.

[3]பகவத்ப்ராப்தி இவனுக்கு இஷ்டமாகாதோவென்னில், 'நெறிவாயிற் றானேயாய் நின்றான்' என்கிறபடியே [4]உபாயோபேயங்களிரண்டும் அவனாகையாலே, அது இவனுக்கு [5]ஸித்தமாயிருக்கையாலே ஸித்தோபாயநிஷ்டனான இவன் அதற்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணக்கடவனில்லை.

ஆனால் இவனுக்கு [6]நித்ய [7]நைமித்திக முதலான [8]சுக்ருதங்கள் செய்யவேண்டாவோவென்னில்,—வேண்டும். அவற்றைத்

---

[1] ஸாதநாநுஷ்டாநம் - தனக்குப்பயன்கருதிய ஒழுக்கம்.

[2] இஷ்டாநிஷ்டங்கள் - விருப்பு வெறுப்புக்களுக் கிலக்காமவை.

[3] பகவத்ப்ராப்தி - எம்பெருமானையடைகை.

[4] உபாயோபேயம் - உபாயமும் உபேயமும்; உபாயம் - அடைவிப்பது; உபேயம் - அடையப்படுவது.

[5] ஸித்தம் - பெறப்பட்டது.

[6] நித்யம் - நாள்தோறும் தப்பாமே செய்யத்தக்கது.

[7] நைமித்திகம் - யாதேனும் ஒரு நிமித்தம்பற்றிச் செய்யத்தக்கது.

[8] சுக்ருதம் - நல்லொழுக்கம்.

தனக்கெனச் செய்யாது, அவனுக்குச் செய்யும் [1]தாஸ்யவ்ருத்திக்கு [2]போக்யதாபாதகமான [3]ஸ்வரூபதர்ம்மாகக்கொண்டு, கரும்புதின்பாரைப்போலே [4]ராகப்ராப்தமாக ருசியோடே செய்துபோதரும்.

இவ்விஷயங்களுக்கு இப்பாசுரத்தில் ஏதேனும் [5]ஜ்ஞாபகமுண்டோவென்னில், மூன்று ஜ்ஞாபகங்களுண்டு. அவை:—(1) தேசிகன் உரைத்த மெய்யே அருள் பொருள், (2) தாதை உரைத்த மெய்யே அருள் பொருள், (3) அவன் (-காவலன்) உரைத்த மெய்யே அருள் பொருள்: என்று விசேஷித்துச் சொல்லப்படுவனவாம்.

இவற்றால், ப்ரபந்நாநுஷ்டாநத்தில் ப்ரபந்நனுடைய நினைவிருக்கும்படி சொல்லப்படுகிறது. அது எங்ஙனேயிருக்குமென்னில், (1) பரமாசார்யனாற் சொல்லப்பட்டமையால் அவனுக்காக இவை [6]அநுஷ்டேயம், எனக்காகவில்லை; (2) பரமபிதாவாற் சொல்லப்பட்டமையால் அவனுக்காக இவை அநுஷ்டேயம், எனக்காகவில்லை; (3) காவலனாகிய ஸர்வேசுவரனாற் சொல்லப்பட்டமையால் அவனுக்காக இவை அநுஷ்டேயம், எனக்காகவில்லை: என்றிருக்கும்.

இந்நினைவோடு இவன் அநுஷ்டிக்கையாலே அவ்வநுஷ்டாநங்கள் இவனுக்கு [7]வைதமும் ஸாதநாநுஷ்டாநமுமாகாது, ராகப்ராப்தங்களாகவே அநுஷ்டிக்கப்படுவனவாம்.

இவற்றிற்குப் பூர்வவ்ருத்தாந்தங்களுண்டோவென்னில், உண்டு.

(1) ஆழ்வார், 'பாடியாடிப் பணிமி னவன்தாள்களே' என்று [8]விதிப்ரயுக்தமாய் அருளிச்செய்திருப்பதை, மதுரகவியாழ்வார்

---

[1] தாஸ்யவ்ருத்தி - அடிமைத்தொழில்.

[2] போக்யதாபாதகம் - உரிமையுண்டாக்குவது.

[3] ஸ்வரூபதர்மம் - தன்னியல்பு.

[4] ராகப்ராப்தம் - ஆசையால் அடையப்படுவது.

[5] ஜ்ஞாபகம் - அறிகுறி.

[6] அநுஷ்டேயம் - ஒழுகற்பாலது.

[7] வைதம் - விதிக்கப்பட்டது.

[8] விதிப்ரயுக்தம் - கட்டளையுடன்கூடியது.

'தேவுமற்றறியேன் குருகூர்நம்பி பாவின் இன்னிசை பாடித்திரிவனே' என்று ராகப்ராப்தமாய் அநுஷ்டித்துக்காட்டினார்.

பெரியபெருமாள் [1]நியமநம் என்னும் இந்நிலைவாலே, திருப்பாணாழ்வார் முநிவாஹநரானார்.

பெருமாளுக்கு [2]ஸ்த்ரீஹத்தியாய் அநிஷ்டமாயுள்ள தாடகா வதமும் ஆசார்யவசநம் என்னும் இந்நிலைவுகொண்டு இஷ்டமாயிற்று. இதனை மஹாகவியான கம்பநாடர்,

'ஐயன், அங்கது கேட்டு அறனல்லவும்
எய்தினல் 'அதுசெய்க' என்றேவினல்
மெய்ய நின்னுரை வேத மெனக்கொடு
செய்கையன்றே அறஞ் செய்யுமா றென்றான்.'

என்று கூறியிருப்பதும் இங்கு நோக்கத்தகும்.

ஏகலவனுக்கு அநிஷ்டமாயுள்ள [3]அங்குஷ்டச்சேதநமும் ஆசார்யவசநமென்னும் இந்நிலைவால் இஷ்டமாயிற்று.

இந்த வ்ருத்தாந்தங்களைத் திருவுள்ளம்பற்றியே "தேசிகனுரைத்த" என்று விசேஷித்தபடி.

(2) பிதாவாயிருப்பவன் புத்திரனுக்கு அநிஷ்டமாயிருப்பதொன்றைச் செய்யச்சொன்னாலும், அதை அவன் இஷ்டமாகக் கொண்டு செய்வதே பித்ருத்ருப்திகரமாம். இந்நிலைவுகொண்டு பாசுராமன் பித்ருவாக்கியத்தால் தனக்கு அநிஷ்டமாயுள்ள [4]மாத்ருஹத்தியைச் செய்தான். அதனால் அந்த மாத்ருஹத்தியில் அவனுக்குக் [5]கர்த்ருத்வ [6]பலபோக்த்ருத்வங்களும் இல்லையாயின. இந்த வ்ருத்தாந்தந்தோன்றுமாறு 'தாதையுரைத்த' என்று விசேஷிக்கப்பட்டது.

---

[1] நியமனம் - கட்டளை.

[2] ஸ்த்ரீஹத்தி - பெண்கொலை.

[3] அங்குஷ்டச்சேதநம் - பெருவிரலைத் துண்டித்தல்.

[4] மாத்ருஹத்தி - தாய்க்கொலை.

[5] கர்த்ருத்வம் - செய்பவனாயிருக்குந்தன்மை.

[6] பலபோக்த்ருத்வம் - பயன்நுகர்ச்சி.

(3) இனி, ரக்ஷகனை ஸர்வேச்வரன் சொல்வதை ரக்ஷ்ய கோடியிலுள்ளார் [1]க்ருத்யாக்ருத்யவிசாரமில்லாமலே செய்யக் கடவர். ஸர்வேச்வரனிட்ட கட்டளையாலே, அவனுக்காக ருத்ரன் ஸம்ஹாரகர்த்தாவாய் [2]ஜீவவதம் செய்துபோதரும்; அந்நினைவால் அவனுக்கு ஜீவவதத்தில் கர்த்ருத்வ பலபோக்த்ருத்வங்கள் இல்லையாயின. அவனே தனக்கெனச் செய்த ப்ருஹ்மசிரச்சேதத்தில் கர்த்ருத்வ பலஸங்கங்கள் உண்டானவாறு கண்டுகொள்க. இவ்வர்த்தம் தோன்றுமாறு "அவன் உரைத்த" என்று விசேஷிக்கப்பட்டது.

இந்த வ்ருத்தாந்தங்களெல்லாம் குறிப்பாற்கொள்ளுமாறு சொல்லப்பட்டமையால் இவனுக்குள்ள ஏற்றம் தோற்றும் ஸ்வரூப க்ருததாஸ்யமும் சொல்லியவாறாயிற்று.

இவ்வாறு தனக்கென்றாது அவனுக்கென்று செய்யும் ஸ்த்ரீ ஹத்தி மாத்ருஹத்தி [3]ஜீவஹத்திகளும் [4]ஸ்வரூபக்ருதமான தாஸ்ய வ்ருத்திக்கு இலக்காய் இஷ்டமாம்போது, இஷ்டமான தத்வ தர்சநம் முதலான ப்ரபந்நாநுஷ்டாநங்களெல்லாம், பழம் நழுவிப் பாலில்விழுந்தது போலேயும், பிணிக்கு மருந்தான தேவாம்ருதமே [5]போக்யபுத்தியால் உணவானாற்போலேயும் இஷ்டதமமாகக் கொண்டு அத்யந்தப்ரீதியோடு ராகப்ராப்தமாக அநுஷ்டிக்கத் தட்டில்லை.

இவ்வர்த்தத்தை [6]ஸ்திரீகரிக்கவேண்டியே (1) தேசிகனுரைத்த, (2) தாதையுரைத்த, (3) அவனுரைத்த என்று மும்முறைசொல்லி நிரூபிக்கலாயிற்று.

ஆனால் இவ்வநுஷ்டாநங்களில் இவனுக்குப் [7]பாரார்த்தகர்த்ருத்வ பலபோகங்களும் இல்லையோ வென்னில், இவன்புத்தியால்

---

[1] க்ருத்யாக்ருத்யவிசாரம்-இது செய்யத்தக்கது, இது செய்யத்தகாதது என்னும் ஆராய்ச்சி.

[2] ஜீவவதம் - உயிர்க்கொலை.

[3] ஜீவஹத்தி - உயிர்க்கொலை.

[4] ஸ்வரூபக்ருததாஸ்யம் - இயல்பாற்செய்யும் குற்றேவல்.

[5] போக்யபுத்தி - இன்பநுகர்தற்குரியதென்னும் நினைவு.

[6] ஸ்திரீகரிக்க - நிலைநாட்ட.

[7] பாரார்த்தம் - பிறர்பொருட்டு.

இல்லை. அதற்கு அடி என்னெனில், இவன் செய்யும் [1]ஸத்கர்மங்களெல்லாம்,

[2]'𑌸𑍍𑌵𑌶𑍇𑌷𑌭𑌤𑍂𑌤𑍇𑌨 𑌮𑌯𑌾 𑌸𑍍𑌵𑍀𑌯𑍈𑌃 𑌸𑌰𑍍𑌵𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌦𑍈𑌃 ।
𑌵𑌿𑌧𑌾𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌦𑍇𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍍𑌰𑌮𑌤𑍇 𑌸𑍍𑌵𑌯𑌂 ॥'

என்று [3]பகவத்கர்த்ருகங்களாகவே இவனால் கருதப்பட்டமையாலும் இவனுக்கு அஹங்கார நிவ்ருத்திவந்தமையாலும் அவற்றில் கர்த்ருத்வமில்லை. தன்னை அவற்றிற்குக் [4]கரணமாகச் சொல்லியபடியால் [5]பலபோகமும் இவன்புத்தியால் இல்லையாயிற்று.

ஆகவே, இவன் செய்யும் ஸுக்ருதங்களெல்லாம் இவன் செய்தனவாகாமையால் "𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍" என்கிறபடியே கர்மாநுஷ்டாநத்தில், [6]கர்மேதரமான ஸ்வஸ்வரூபஜ்ஞானத்தைப் பார்ப்பவனாகிறான் என்பதாயிற்று.

'அருளே பொருளாம்' என்றது அருள் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களும் இவன்செய்யும் ப்ரபந்நாநுஷ்டாநமாகிற நிஷ்காம்ய யஜ்ஞவிசேஷத்துக்கு யஜ்ஞோபகரணங்களான பதார்த்தவிசேஷங்களாம் என்றவாறு.

அருளாவது: தத்வதர்சநம் அடியாகவரும் [7]பூததயையாகிய ஸமதர்சநம். இது,

---

[1] ஸத்கர்மம் - நல்லொழுக்கம்.

[2] இதன்பொருள்: 'ஸர்வேசுவரன், தன் அடியனான என்னாலே, தன்னுடைய எல்லா உபகரணங்களாலும் தன்னை உவப்புடையனாக்கவேண்டித் தானே இந்நற்கருமத்தைச் செய்யத்தொடங்குகிறான்' என்பது.

[3] பகவத்கர்த்ருகம் - இறைவன்செயல்.

[4] கரணம் - கருவி.

[5] பலபோகம் - பயனுகர்வு.

[6] கர்மேதரம் - கர்மத்தின் வேறானது.

[7] பூததயை - உயிர்களிடத்து இரக்கம்.

[1]𑌆𑌤𑍍𑌮𑍌𑌪𑌮𑍍𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌯𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌸𑍁𑌖𑌂 𑌵𑌾 𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌪𑌰𑌮𑍋 𑌮𑌤𑌃 ॥

என்று அவனாற் சொல்லப்பட்ட ஸமதர்சநமாயிற்று. இதையே [2]பரசம்ருத்தி என்பர்.

இது, இவன் எப்படி அவனுக்கு சரீரமோ அப்படியே ஸகல ஜீவர்களும் அவனுக்கு சரீரமாகையாலே, சரீரத்துக்குச் செய்யும் அநிஷ்டங்கள் [3]சரீரிக்கு[4]அஸஹ்யமாகும் என்றெண்ணிப் [5]பரபீடநாதி பாபங்களைச் செய்யாமைக்கு அடியாயிற்று. [6]அபக்ஷ்யபக்ஷணம் [7]அபேயபாநம் முதலிய [8]நிஷித்தகர்மங்களைச் செய்யாமைக்கு அடி என்னென்னில், அவனுக்கு சரீரமாயுள்ள தன்னைத் தான் அழுக்காக்கலாகாதென்னும் இந் நினைவாம் என்க. இதனால், இவன் ஸுக்ருதம் செய்கைக்கு [9]பலாபிஸந்தியும், [10]துஷ்க்ருதநிவ்ருத்திக்கு பாப[11]பீதியும் காரணமில்லை என்பது பெறப்பட்டது.

இப்படியே மற்றுமுள்ள ப்ரபந்நாநுஷ்டாநங்களும் இவன் பாபம்செய்யாமைக்கு அடியாயிருப்பதை ஏற்றபெற்றி ஆராய்ந்து அறிந்துகொள்ளத்தகும்.

---

1 இதன்பொருள்: 'யாவனொருவன் சுகதுக்கங்களைத் தன் ஒப்புமை யுணர்வால் எல்லா உயிர்களிடத்தும் பார்க்கிறானோ அவன் பரமயோகியென்பது மேலானகொள்கை' என்பதாம்.

2 பரஸம்ருத்தி - பிறர்க்குநலங்கருதல்.

3 சரீரி - உடலுடையான்.

4 அஸஹ்யம் - பொறுத்தற்கரிய துன்பம்.

5 பரபீடநம் - பிறரைவருத்துதல்.

6 அபக்ஷ்யபக்ஷணம் - உண்ணலாகாததை உண்ணல்.

7 அபேயபாநம் - பருகலாகாததைப் பருகல்.

8 நிஷித்தம் - மறுக்கப்பட்டது.

9 பலாபிஸந்தி - பயன்கருதுகை.

10 துஷ்க்ருதம் - தீயசெயல்.

11 பீதி - அச்சம்.

அவன் சொல்லிய [1]அமாநித்வம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களின் [2]அவஸாநத்திலுள்ள தத்வார்த்த தர்சநத்தை (-மெய்ப்பொருளுணர்வை) இதில் மெய்யென்று முதலிற் சொல்லியிருப்பதால், அம்மெய்ப்பொருளுணர்வு, அதற்குமுன்பு சொல்லப்பட்டுள்ள அமாநித்வமாதியான ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கெல்லாம் [3]உபலக்ஷணமாயிற்று. அவை:—

[4]"𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑌦𑌮𑍍𑌭𑌿𑌤𑍍𑌵𑌮𑌹𑌿𑌂𑌸𑌾 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌂 𑌶𑍌𑌚𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌅𑌨𑌹𑌂𑌕𑌾𑌰 𑌏𑌵 𑌚 ।
𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌦𑍁𑌃𑌖𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ॥
𑌅𑌸𑌕𑍍𑌤𑌿𑌰𑌨𑌭𑌿𑌷𑍍𑌵𑌂𑌗𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌦𑌾𑌰𑌗𑍃𑌹𑌾𑌦𑌿𑌷𑍁 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌸𑌮𑌚𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌮𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 ॥
𑌮𑌯𑌿 𑌚𑌾𑌨𑌨𑍍𑌯𑌯𑍋𑌗𑍇𑌨 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀 ।
𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌮𑌰𑌤𑌿𑌰𑍍𑌜𑌨𑌸𑌂𑌸𑌦𑌿 ॥
𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ।
𑌏𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑌦𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌥𑌾 ॥"

என்று சொல்லப்பட்டனவாம்.

---

[1] அமாநித்வம் - தன்மதிப்பின்மை.

[2] அவஸாநம் - முடிவு.

[3] உபலக்ஷணம் - ஒருமொழி ஒழிந்த தன்னினப்பொருளையுங் கொள்ளற்குரியதாதல்.

[4] இ-ள்: 'தன்மதிப்பின்மை, ஆடம்பரமின்மை, இன்னாசெய்யாமை, பொறுமை, நேர்மை, குருவழிபாடு, தூய்மை, ஒருநிலை, மனனடக்கம், புலனடக்கம், செருக்கின்மை, பிறப்பும் இறப்பும் மூப்பும் பிணியும் துன்பமுமாகிய ஸம்ஸாரதோஷங்களையறிதல், பற்றின்மை, சமநிலை, பகவத்பக்தி, ஒதுக்கிடத்திருப்பு, லௌகிகஜனக்கூட்டங்களிற் சேர்ந்திருக்க விருப்பின்மை, வேதாந்தசாஸ்த்ரவிசாரம், மெய்யுணர்வால் காரியப்பொருள்களை ஆராய்ந்துணர்தல்: என்னும் இவை ஜ்ஞாநமென்று சொல்லப்படும். இவற்றின் மாறுதலையுணர்வு அஜ்ஞாநமென்று சொல்லப்படும்' என்பது.

இவை ஜ்ஞாநகார்யங்களாயும், ஜ்ஞாநகாரணங்களாயும், ஜ்ஞாநாநுஷ்டாநங்களாயும், ஜ்ஞாநவிசேஷங்களாயும் இருப்பதால் ஜ்ஞாநம் என்றே சொல்லப்பட்டன.

இவற்றை அநுஷ்டித்துவரும் ப்ரபந்நனிடம் இவற்றின் மறுதலையான அஜ்ஞாநங்கள் ஒன்றும் தோன்றமாட்டாதாகையால் அஜ்ஞாநகார்யங்களாகிய பாபங்களும் புகுதரமாட்டாவென்பது பற்றி, தேசிகனும் தாதையும் அவனுமான மூன்றுநிலையில்நின்று அவை ஸர்வேச்வரனால் உரைக்கப்பட்டன என்றார். மேல்வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

தர்மமாயுள்ள இவற்றை அறமென்றது, 'பொருள்' என்ற ஸமாதியால், இவனுக்கு இவை ஸாதநாநுஷ்டாநமான தர்மமில்லை; கேவலம் பதார்த்தரூபம் என்பதும், இன்னும், இவை பொருள் என்றதனால், வேறு புருஷார்த்தரூபமான பொருள் இருந்தாலும், "அடங்கெழில் சம்பத் தடங்கக் கண்டு ஈசனடங்கெழி லஃதென்று அடங்குக" என்கிறபடியே [1]பகவத்விபூதியாயெண்ணி, மமகார நிவ்ருத்தியோடு, அவனுகப்புக்கு இலக்காக்கியிருப்பவனாதலால், இவனுக்கு அதில் [2]அந்வயமில்லை என்பதும் பெறப்படும்.

இவற்றால் இவனுக்குத் தர்மார்த்தங்களிரண்டிலும் அந்வயம் இல்லையென்று கழிக்கப்பட்டனவாம். இவை [3]ஆகிஞ்சந்யஸூசகம்.

இனி, காமபுருஷார்த்தமும் இல்லை என்பது காட்டப்படும், 'சூடியவெண்மதி காதலியாம்' என்று.

இது இந்த யஜ்ஞதம்பதியின் ஸ்வரூபரூபகுணாதிகளையும், யஜ்ஞக்ருத்யங்களையும் சொல்லுகிறது.

இதனுள், 'மதி' என்றது புத்தியாய், அது [4]ஆத்மாவலோகநரூபமான ஜ்ஞாநாநுஷ்டாநத்தையுணர்த்துகிறது.

---

[1] பகவத்விபூதி - ஈசுவரஸம்பத்து.

[2] அந்வயம் - தொடர்பு.

[3] ஆகிஞ்சந்யம் - வேறு ஓராதரவுமின்மை.

[4] ஆத்மாவலோகநம் - தன்னைத்தானே நோக்குகை.

தத்வதர்சநத்திலுள்ள ஆத்மஜ்ஞாநம் [1]சாஸ்த்ரஜந்யமாகையால் அது [2]சாப்தமாகவும், இது ஆத்மஸாக்ஷாத்காரரூபமான அநுபவமாகவும் வேறுபட்டிருப்பதால் [3]புநருக்தமாகாது.

காதலி என்றது, ப்ரபந்நாநுஷ்டாநரூபமான இந்த நிஷ்காம்ய யஜ்ஞவிசேஷத்தை இவனுடனிருந்துசெய்யும் [4]யஜ்ஞஸம்யுக்தையான தர்மபத்நியாக புத்தியைச் சொல்லுகிறது.

மதி, காதலி என்னும் இவ்விருபொருளும் வெண்மையால் விசேஷிக்கப்பட்டன. வெண்மையாவது தூய்மை; தனிமையுமாம்.

மதி (புத்தி)க்குத் தூய்மை [5]ப்ராக்ருதவிஷயப்பற்றுகியதோஷமின்றி [6]ப்ராக்ருதிவிமுக்தபரிசுத்தாத்மஸ்வரூபத்தை [7]விஷயீகரித்திருக்கை.

காதலிக்கு (லௌகிகயஜ்ஞபத்நிக்கு)த் தூய்மையாவது [8]அஸ்ப்ருஸ்யஸ்பர்சநாதி தோஷரஹிதையாய்ப் பர்த்ருஸம்யுக்தையாயிருக்கை. இந்த [9]ஸாதர்ம்யம்கொண்டு வெண்மதி காதலி என்று சொல்லப்பட்டது.

இவ்வாறன்றி, தேஹாத்மப்ரமரூபமான அஜ்ஞாநம் காரறிவு என்று சொல்லப்படுதலால், அதற்கு [10]ப்ரதிகோடியான சுத்தாத்ம தத்வஜ்ஞாநம் வெண்மதி எனப்பட்டது என்னவுமாம்.

---

[1] சாஸ்த்ரஜந்யம் - நூலாற்றோன்றுவது.

[2] சாப்தம் - சொல்லாற்றோன்றும் உணர்வு.

[3] புநருக்தம் - கூறியது கூறல்.

[4] யஜ்ஞஸம்யுக்தை - வேள்விக்கு உடனிருப்பவள்.

[5] ப்ராக்ருதம் - உலகியல்.

[6] ப்ரக்ருதிவிமுக்தம் - சரீரத்தின் வேறானது.

[7] விஷயீகரித்திருக்கை - அறிவுக்கிலக்காகக்கொண்டிருக்கை.

[8] அஸ்ப்ருஸ்யஸ்பர்சநம் - தீண்டத்தகாததைத் தீண்டல்.

[9] ஸாதர்ம்யம் - ஒப்புமை.

[10] ப்ரதிகோடி - மறுதலை.

பகவத்ஸம்பந்தவிசிஷ்டமான பரிசுத்தாத்மஜ்ஞாநத்தோடு கூடியே ப்ரபந்நாநுஷ்டாநம் நடைபெறுவதாகையால், இந்த ப்ரபந்நாநுஷ்டாநமாகிற நிஷ்காம்யயஜ்ஞவிசேஷத்துக்கு அந்த பகவத்ஸம்பந்தவிசிஷ்டமான பரிசுத்தாத்மஜ்ஞாநம் [1]யஜ்ஞகர்த்தாவுடன் கூடியிருக்கும் தர்மபத்நியாகக் கொள்ளத்தக்கதாயிற்று.

இங்கு இவ்வாத்மஜ்ஞானம், [2]ஆத்மநிஷ்டமான [3]பகவத்தாஸ்ய நிரூபகங்களாயுள்ள [4]அசேஷசேஷவ்ருத்திகளையும் [5]விஷயீகரிக்கும் என்பது போதர, வெண்மதி (-பரிசுத்தாத்மஜ்ஞாநம்) என்று சொல்லியதோடமையாது, சூடியவெண்மதி என்று விசேஷிக்கப்பட்டது. சூடிய என்னும் இது ஆத்மநிஷ்டமான பகவச்சேஷத்வ ஸூசகமாய், கேவலாத்மஜ்ஞாநத்தை வ்யாவர்த்திக்கிறது.

சூடிய என்னும் [6]க்ரியாபதார்த்தஸாமர்த்யத்தால் சூடுதற்கு இடம் தலை என்பதும், அதற்குச் செயப்படுபொருள் மலர்மாலை என்பதும் 'சூடிக்கொடுத்தாள்' என்பதிற்போலே தானே பெறப்படும். [7]லௌகிகயஜ்ஞபத்நியிடம் இவையிரண்டும் [8]ப்ரஸித்தம்.

இதனால், சூடியவெண்மதி என்பதற்கு, மலர்மாலை தலைமீது சூடியபத்நி, மலர்மாலை தலைமீதுசூடிய காதலியாம்என்பது பொருளாயிற்று.

இப்பொருளின் உபலக்ஷணக்குறிப்பாலே, லௌகிகயஜ்ஞதம்பதிகளிடமுள்ள [9]மால்யாநுலேபநாத்யலங்காரங்களும், யஜ்ஞக்ருத்யங்களும் கொள்ளப்படும். அந்த ஸாதர்ம்யத்தாலே இந்த

[1] யஜ்ஞகர்த்தா - வேள்வியியற்றுவோன்.

[2] ஆத்மநிஷ்டம் - ஆன்மாவிலுள்ளது.

[3] பகவத்தாஸ்யநிரூபகம் - இறைவனுக்கு அடிமையென்பதைக்குறிப்பது.

[4] அசேஷசேஷவ்ருத்தி - எல்லாப்பணிவிடையும் செய்கை.

[5] விஷயீகரிக்கும் - புலப்படுக்கும்.

[6] க்ரியாபதார்த்தஸாமர்த்யம் - வினைச்சொற்பொருளாற்றல்.

[7] லௌகிகயஜ்ஞபத்நி - உலகியல்வேள்விக்குரியாள்.

[8] ப்ரஸித்தம் - வெளிப்படை.

[9] மால்யாநுலேபநம்: மால்யம் - மாலை. அநுலேபநம் - பூச்சு.

ப்ரபந்நாநுஷ்டாநஜ்ஞாநப்ரதிபத்திகளிடம், திருமணிக்காழ்வடம்பூணுதல் திருப்பவித்ரமாலையணிதல் த்வாதசோர்த்வபுண்ட்ரதாரணம் முதலான வேஷங்களும், ப்ரபந்நாநுஷ்டாநத்துக்குரிய கர்மாநுஷ்டாநங்களும், பகவதாராதந க்ருத்யங்களும் எல்லாம் கொள்ளத்தகும்.

இவ்வாற்றால் இவன் பகவதாராதநபரனாய்! பகவத்ப்ரஸாத ஸ்வீகாரம் முதலான ஆசேஷசேஷவ்ருத்தியும்செய்துபோருகை சூடிய என்னும் விசேஷணத்தால் பெறப்படும்.

சூடிய என்னும் இவ்விசேஷணம் ஆத்மஜ்ஞாநமான காதலி யிடம் எங்ஙனேகூடும்? என்னில்,--இவன்செய்யும் ஆத்மாவலோகநம் இவனிடத்துள்ள பகவச்சேஷத்வ த்யோதகமான [1]விசிஷ்டவேஷத்தையும் விஷயீகரித்திருக்குமாகையால், இவனுக்கும் அவனுக்குமுள்ள [2]சேஷசேஷிபாவ சம்பந்தத்தால், அவனுக்குள்ள [3]அதிசயத்தை விளக்கவேண்டி, இவனுக்குள்ள [4]தாஸ்யவ்ருத்தியெல்லாம் தோன்றுமாறு, 'உடுத்துக் களைந்த நின் பீதகவாடை யுடுத்துக் கலத்ததுண்டு - தொடுத்த துழாய்மலர் சூடிக்களைந்தன சூடுமித் தொண்டர்களோம்' என்கிறபடியே இவன் தரித்திரிக்கும் மால்யாநுலேபந வஸ்த்ரபூஷணாதிகளையும், பகவத் [5]பரிசர்யைகளையும், பகவத்ப்ரஸாத ஸ்வீகாரத்யோதகமான துழாய்மாலை மலர்மாலை சூடியிருப்பதையும் இவனை விஷயீகரிக்கும் பரிசுத்தாத்மஜ்ஞாநமும் கண்ணாடிபோலே தானும் தரித்துக்காட்டுமாகையாலே அது 'சூடிய வெண்மதி'யென்று சொல்லப்பட்டது [6]உபபந்நமாமென்க.

---

[1] விசிஷ்டவேஷம் - ஆன்மா உடலுடன்கூடியநிலை.

[2] சேஷசேஷீபாவசம்பந்தம் - ஆண்டானடிமைத்திறம்.

[3] அதிசயம் - உயர்வு.

[4] தாஸ்யவ்ருத்தி - அடிமைத்தொழில்.

[5] பரிசர்யை - பணிவிடை.

[6] உபபந்நம் - பொருந்தியது.

4

ஆனால், ஜ்ஞாநைகமயமாய் [1]நிராகாரமான ஆத்மஸ்வரூபத்தை விஷயீகரிக்கும் ஆத்மஜ்ஞாநத்தில், [2]ஸாகாரமான இவன் சரீரமும், அதில் தரித்திருக்கும் வேஷங்களும், அவற்றோடு செய்யும் [3]சேஷவ்ருத்திகளும் எங்ஙனம் தோன்றும் என்னில்,

"𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ।
𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿 ॥"

என்பதனால், 'எந்த ஆத்மதத்வஜ்ஞாநத்தாலே (ஸாகாரமாயுள்ள) ஸமஸ்தமான பூதப்பொருள்களையும் (நிராகாரமாயுள்ள) ஆத்மாவினிடத்திலும், அப்படியே என்னிடத்திலும் பார்ப்பாயோ அந்த ஜ்ஞாநத்தை தத்வதர்சிகளான ஜ்ஞாநிகள் உனக்கு உபதேசிப்பார்கள்;' என்று அர்ஜுநனை நோக்கி அவனே சொல்லியிருப்பதால் தோன்றுமென்க.

அன்றியும்,

"𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌚𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 ।
𑌈𑌕𑍍𑌷𑌤𑍇 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾"

என்பதனால், 'யோகநிஷ்டனாயுள்ள தான், தன்னை ஸமஸ்தமான பூதப்பொருள்களிலும் இருப்பவனாகவும், ஸமஸ்தமான பூதப்பொருள்களும் ஆத்மாவாகிய தன்னிடத்திலிருப்பனவாகவும் பார்க்கிறான்' என்று சொல்லியிருப்பதாலும், இவன் செய்யும் ஆத்மதர்சநத்தில் ஸாகாரமான இவன் விசிஷ்டரூபமும், பகவத்தாஸ்ய ஸூசகங்களான வேஷங்களும், இவன் [4]சேஷிபக்கல் செய்யும் அசேஷசேஷவ்ருத்திகளும் [5]ஸ்ம்ருதிவிஷயம்போலே இவன் [6]இச்சாதீநமாக, [7]விஷயமாமென்றே கொள்ளத்தகும்.

---

1 நிராகாரம் - வடிவில்லாதது.

2 ஸாகாரம் - வடிவுடன்கூடியது.

3 சேஷவ்ருத்தி - பணிவிடை.

4 சேஷி - ஆண்டான்.

5 ஸ்ம்ருதிவிஷயம் - நினைவிற்றோன்றுவது.

6 இச்சாதீநமாக - விருப்பம் அடியாக.

7 விஷயமாம் - புலப்படும்.

அன்றியும், 'ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோக்ஷிஶிரோமுகம்' என்று தொடங்கி ஆத்மஸ்வரூபமுழுதும், கையும் காலும் கண்ணும் தலையும் வாயும் பலசெயல்களும் உண்டென்று அவனால் சொல்லப்பட்டிருப்பதால் இவன் [1]இச்சாநுகுணமான க்ரியைகளுடனேகூடிய [2]ஸாவயவசரீரரூபமாகவும் தோன்றத் தட்டில்லை. இதுகொண்டே, "வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து, அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை"யும் பொருந்துகிறது. இவன் தொழுகைக்கு அவனிடத்தும் துயரறுசுடரடியும் தோன்றாநிற்கும்.

இவ்வாறே, இவன் செய்யும் ஆத்மாவலோகநம் பகவதநுபவ விசிஷ்டமாயிருக்கும் என்பது, (ஆத்மஸம்யமயோகாத்யாயாவஸாநத்தில்,)

[3]"யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா ।
ஶ்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: " ॥

என்று அவன்தானே சொல்லியிருப்பதால் கொள்ளத்தக்கதாயிற்று.

இதனாலும், 'அவனுரைத்த சூடியவேண்மதி' என்று ஆத்மாவலோகனம் விசேஷிக்கப்பட்டதென்றறியக்கிடக்கிறது.

---

[1] இச்சாநுகுணம் - விருப்பத்தின்படி.

[2] ஸாவயவம் - உறுப்புடன் கூடியது.

[3] இதன்பொருள்:—'ஆத்மதர்சநம்வல்ல யோகிகளுக்குள்ளே, சிரத்தையுடையவனாய் என்னைப்பற்றியிருக்கும் உள்நோக்குடைய மனத்தாலே, எவன் என்னை ஸேவிக்கிறானோ, அவன் யோகிகளிற் சிறந்தவனாயும் எனக்கு விருப்பமுள்ளவனாயும் இருக்கிறான்' என்பது. (இதில் உள்நோக்குள்ளமநம் என்றதனால், ஆத்மதர்சநத்தின் வாயிலாக பரமாத்மதர்சநம் செய்தற்குச் செல்லும் மநம் என்பதும், பஜநக்ரியையால், சேஷசேஷீபாவசம்பந்தம் கொண்டு என்னை ஆராதிப்பவன் என்பதும் சொல்லப்பட்டன.)

இவனுக்குக் கூடிய வெண்மதியைக் காதலியாகச் சொன்னமையால் வேறு பந்நிருக்காலும் காதலுக்கு இலக்காகான் என்று [1]விஹிதவிஷய நிவ்ருத்தியும் சொல்லியதாயிற்று. ஆகவே இவனுக்குக் காமபுருஷார்த்தமும் இல்லையென்பது கருத்து.

ஆனால் விஹிதவிஷயமான காமம், [2]"தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப" என்று [3]உபாதேயமாய்ப் படிச் சொல்லப்பட்டிருப்பதால், அதை நிவ்ருத்திக்கைக்குக் கூடியது என்னென்னில், அது [4]ப்ரவ்ருத்திநிஷ்டனுக்கு உபாதேயமானாலும், [5]நிவ்ருத்திநிஷ்டனான இவனுக்கு, தேஹாத்மப்ரமமடியாகத் தோன்றி [6]ஸ்வார்த்தைக போகபுத்தியையுண்டாக்கி [7]ஸ்வரூபஹானியைப் பிறப்பிக்கையாலும், அவனுக்காக இவன் அது செய்யலாகாதாகையாலும், அது இவனுக்கு விரோதியென்று அவனாற் சொல்லப்பட்டிருக்கையாலும் [8]த்யாஜ்யமாயிற்று. அது இவனுக்கு விரோதியென்று அவனாலே சொல்லப்பட்டிருப்பதைப் பின்பு நிரூபிக்கலாகும்.

இதனளவும் இவனிடம் பாபம் புகுதாமைக்கு அவனுரைத்த மெய்யுணர்வு (—தத்வதர்சநம்) சொல்லி, அம்மெய்யுணர்வடியாகத் தோன்றும் ஸமதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநம் சொல்லி, அதனாலுண்டாகும் ஜ்ஞாநத்தால் ஸாக்ஷாத்கரிக்கப்படும் பகவத்ஸம்பந்த விசிஷ்டமான பரிசுத்தாத்மஸ்வரூபம் சொல்லியவாறாயிற்று. இதுகொண்டே பகவத்பரிசர்யாரூபமான சேஷவ்ருத்திகளும் குறிப்பாற் சொல்லப்பட்டன. இவ்வநுஷ்டாநத்தால்,

---

1 விஹிதவிஷய நிவ்ருத்தி - விதிக்கப்பட்ட கலவியையும் ஒழிதல்.

2 இதன்பொருள். 'அர்ஜுநா! ப்ராணிகளிடத்தில் அறத்தொடுகூடிய காமமாயிருக்கிறேன்' என்பது.

3 உபாதேயம் - கொள்ளத்தக்கது.

4 ப்ரவ்ருத்திநிஷ்டன் - ஐசுவரியகாமன்.

5 நிவ்ருத்திநிஷ்டன் - பகவத்ப்ராப்திகாமன்.

6 ஸ்வார்த்தைக போகபுத்தி - தன்பொருட்டாகவே இன்பநுகரும் விருப்பம்.

7 ஸ்வரூபஹாநி - தன்னியல்பழிதல்.

8 த்யாஜ்யம் - தள்ளத்தக்கது.

[illegible] (வஶ்யக) என்று அவனாற்சொல்லப்பட்ட படியே கர்மரூபமான ஜ்ஞாநாநுஷ்டாநத்தில் பகவத்பரிசர்யா ரூபமான கர்மாநுஷ்டாநங்களையும் அதற்கு அங்கமான நித்யகர்மாநுஷ்டாநங்களையும் பார்ப்பவனாகிறான் என்பதாயிற்று.

இனி அப்பரிசுத்தாத்மஸ்வரூப ஸாக்ஷாத்கார ஜ்ஞாநத்தை மறைத்து, யஜ்ஞோபகரணங்களாகச் சொல்லப்பட்டுள்ள அமாநித்வம்முதலான ஜ்ஞாநாநுஷ்டாநத்தை அழிக்கக்காத்திருக்கும் அகங்கார மமகாரங்களின் அடியாகத்தோன்றும் காமாதி ஹேயகுணங்களாகிய விரோதிகளை ஒழிக்கவேண்டி, அவ்விரோதிகள் இருக்கும் [1]தேசவிசேஷம் சொல்லுகிறது, 'பொய்யே பகைப்புலன்' என்று.

பொய் என்றது கீழ் அவனுரைத்த மெய் என்னும் தத்வ ஜ்ஞாநாதிகளுக்கு [2]ப்ரதிகோடியான அஜ்ஞாந அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநாதிகளை.

இவற்றுள், அஜ்ஞாநமாவது: மெய்யுணர்வை நிலைநிற்கச்செய்யாமல் ராஜஸதாமஸகுணங்களால் மறந்துவிடுகை.

அந்யதாஜ்ஞாநமாவது: பரிசுத்தாத்மாவாகிய தன்னைப் பரமாத்மாவென்று ப்ரமிக்கை.

விபரீதஜ்ஞாநமாவது: [3]அநாத்மாவான சரீரத்தில் [4]ஆத்மபுத்திபண்ணுகை.

இப்பொய்யுணர்வுகள் [5]ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநம் தோன்றவொட்டாமல் ஆத்மஜ்ஞாநத்தை பொழித்து, இந்த யஜ்ஞத்தை யழிக்கக்காத்திருக்கும் அஹங்கார மமகாரமடியாகவரும்காமாதி ஹேயகுணங்களாகிய விரோதிகளுக்கு இடமாயிருத்தலால், பகைப்புலன் எனப்பட்டது.

---

[1] தேசம் - இடம்.

[2] ப்ரதிகோடி - மறுதலை.

[3] அநாத்மா - உயிர்ப்பொருளாகாதது.

[4] ஆத்மபுத்திபண்ணுகை - யானெனநினைக்கை.

[5] ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநம் - ஆன்மாவின் உண்மையுணர்வு.

பகைப்புலன்—பகையிருக்கும் இடம். புலம் என்னும் இடப் பெயர், ஈறுதிரிந்து, நலம் நலன் என்றானதுபோல் போலியாய்ப் புலன் என்றாயிற்று.

இப்பகைப்புலமாகிய பொய்யுணர்வு இவனால் அறிந்து ஒழிக் கற்குரியதென்பது,

[1]"ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தம் அஜ்ஞாநம் யததோऽந்யதா" என்றும்,

[2]"அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:" என்றும்,

[3]"ஜ்ஞாநேந து ததஜ்ஞாநம் யேஷாம் நாசிதமாத்மந: ।
தேஷாமாதித்யவஜ் ஜ்ஞாநம் ப்ரகாசயதி தத்பரம் ॥" என்றும்,

அவற்றைச் சொல்லப்பட்டமையால் அறியத்தகும்.

'பொய்யே பகை புலன்' என்பது பாடமாயின் ஏகாரத்தைப் புலன் என்பதனோடும் கூட்டி, 'பொய்யே புலனே பகை' என்று அந் வயித்து, 'பொய்யும் புலனும் பகையாம்' என்று பொருள்கொள்க.

பொய் என்பதற்கு முன்புசொல்லியபடி அஜ்ஞாந அந்யதா ஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களும், [4]புலன் என்பதற்கு அவையடியாக வரும் [5]விஷயஸங்கங்களும் பொருளாம்.

ஆகவே அவை காமாதிமோஹகுணங்களாகிய விரோதிகளுக்கு இருப்பிடமாகையால் இவையே பகையாம் என்பது போதரும்

---

1 இதன்பொருள்: 'அமாநித்வம் முதலாக முன்புசொல்லப்பட்ட ஜ்ஞாநாநுஷ்டாநங்களாகிய இவை ஜ்ஞாநமென்று சொல்லப்படும்; இவற் றொடு மாறுபட்டனவெல்லாம் அஜ்ஞாநமாம்' என்பது.

2 இ-ள்: 'அறிவு அறியாமையால் மறைக்கப்பெற்றிருத்தலால் உயிர்கள் மயங்குகின்றன' என்பது.

3 இ-ள்: 'யார்க்கு ஆத்மாவாகிய தன்னையறிதலால் தன்னையறியாமை யாகிய தேஹாத்மப்ரமம் அழிந்ததோ அவர்க்குப் பின்பு சூர்யப்ரகாசம் போல் அறிவு ஒளிராநிற்கும்' என்பது.

4 இங்கு, புலன் என்றது சப்தாதிவிஷயங்களுக்குப் பெயராய் அவற் றின் அநுபவத்துக்கு ஆயிற்று.

5 விஷயசங்கம் - விஷயசம்பந்தம்.

ப்ரபந்நனாகிய இவனுக்குப் பகையேதென்னில் ப்ராக்ருதசரீர முள்ளளவும் ப்ரக்ருதிஸம்பந்தம் இருப்பதால் [1]ப்ராக்ருதநிஷ்டமான ரஜஸ் தமஸ்ஸுக்கள் தலையெடுக்கும்போது பூர்வவாசனையாலே தோன்றக்கடவதாயிருக்கும் விஷயசங்கம் அடியாகக் காமாதிகள் தோன்றி ஆத்மஜ்ஞானத்தைக் கெடுத்தழிக்கக்கூடுமாதலால் அவை விரோதியாமென்க. இதனை,

[2]"𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍋 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌪𑍁𑌂𑌸𑌸𑍍𑌸𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑍇𑌷𑍂𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌸𑌙𑍍𑌗𑌾𑌤𑍍𑌸𑌂𑌜𑌾𑌯𑌤𑍇 𑌕𑌾𑌮𑌃 𑌕𑌾𑌮𑌾𑌤𑍍𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 ॥
𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌸𑌂𑌮𑍋𑌹𑌾𑌤𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑌃 ।
𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌭𑍍𑌰𑌂𑌶𑌾𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌾𑌶𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌾𑌶𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ॥"

என்றும்,

[3]"𑌕𑌾𑌮 𑌏𑌷𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧 𑌏𑌷𑌃 𑌰𑌜𑍋𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।
𑌮𑌹𑌾𑌶𑌨𑍋 𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌨𑌮𑌿𑌹 𑌵𑍈𑌰𑌿𑌣𑌮𑍍 ॥" என்றும்,

[4]"𑌆𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑍈𑌰𑌿𑌣𑌾 ।
𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑍇𑌣" என்றும்,

அவனுரைத்தவாற்றனும், அவனுரைத்த பொய்யே பகைப்புலம் என்றார் என்று அறியலாம்.

---

[1] ப்ரக்ருதிநிஷ்டமான - அநாத்மதத்வகாரியமான சரீரத்தைப்பற்றியுள்ள.

[2] இதன்பொருள்: 'சப்தாதி விஷயங்களின்நினைவால் அவற்றின்சம்பந்தம்உண்டாகிறது; அதனுல் விஷயாநுபவ இச்சை உண்டாகிறது; விஷயாநுபவத்துக்குத் தடையுண்டாயவழி அதை ஒழிக்கக் கோபம் எழும்; கோபத்தால் அறிவழியும்: அதனுல் நினைவுகெடும்; நினைவழிதலால் ஆராய்ச்சி (—தத்வ விசாரம்) அழியும்; ஆராய்ச்சியழிதலால் ஆன்மநாசமுண்டாம்' என்பது. (ஆன்மநாசமாவது - உயிர் உய்வின்றியொழிகை)

[3] இ - ள்: 'விஷய இச்சை க்ரோதமாயும் ரஜோகுணத்தினின்றுண்டானதாயும் பேருணவுடையதாயும் பெரும் பாபரூபமாயும் இருப்பதால் இந்தக் காமத்தை விரோதியாக நினை' என்பது.

[4] இ - ள்: 'இந்தக் காமரூபமான நித்யவிரோதியால் ஜ்ஞாநிகளுடைய ஜ்ஞாநம் மறைக்கப்படுகிறது.' என்பது.

அவ்விரோதிகளிருந்து ராஜ்யம்பண்ணுகைக்கு அஜ்ஞாநம் இடமாயிருப்பதால் 'பொய்யே பகைப்புலன்' என்று சொல்லப் பட்டது. இதனை,

'அருவனத்துள் யானியற்றும் தவவேள்விக்
கிடையூறுய்த் தவஞ் செய்வோர்கள்
வெருவரச்சென் றடைகாம வெகுளியென
நிருதரிடை விலக்கா வண்ணம்'

என்று [1]யஜ்ஞவிக்நகரான ராக்ஷஸர்களுக்குக் காமக்ரோதங்கள் உபமானமாக மஹாகவியாற் சொல்லப்பட்டமையாலும் அறியலாம்.

இப்பகையை வெல்லுகைக்கு உபாயம் உண்டோவென்னில் உண்டென்கிறது, 'ஐயிரண்டோன்று பொருங்கருவி' என்று.

"ஐயிரண்டோன்று பொருங்கருவி" என்றது 'அதிசயிக்கத் தக்க அர்த்தவிசேஷங்களையுடைய ரஹஸ்த்ரயாநுஸந்தாநமானது அவனுடைய சக்ரப்ரயோகம்போலே அஜ்ஞானமாகிய பகைப்புலனை அழித்தற்கு முக்கிய சாதநமாம்' என்றவாறு.

"ஐ வியப்பாகும்" என்னும் [2]நிருக்தியாலே இங்கு, 'ஐ' என்னும் உரிச்சொல், வியப்புக்குறிப்புணர்த்துகிறது.

இரண்டும் ஒன்றும்: என்னும் எண்ணும்மைகள் செய்யுள் விகாரத்தாற் றொருகுதலால் "இரண்டொன்று" என்றாயிற்று. அதனால் அது மூன்று என்னும் தொகைக்குறிப்புப்பெயராய் ரஹஸ்யத்ரயம் என்னும் மந்த்ரவிசேஷங்களையுணர்த்துகிறது.

[3]உபதேசப்ராப்தமாயுள்ள மந்த்ரவிசேஷங்களை வெளிப்படையாகச் சொல்லலாகாமையால் அவற்றை மறைத்துத் தொகைக் குறிப்பாற் சொல்லியதாயிற்று.

இதனை "மூன்றி லொருமூன்றும் மூவிரண்டும் முந்நான்கும்— தோன்றத் தொலையும் துயர்" என இவர் தாமே முன்னும் உரைத் திருப்பதுகொண்டும் அறியலாம்.

---

[1] யஜ்ஞவிக்நகரர் - வேள்விக் கிடையூறுவிளைப்போர்.

[2] நிருக்தி - சொற்பொருள் வரையறுப்பு.

[3] உபதேச ப்ராப்தம் - குருமொழியால் அடையப்பட்டது.

ஸூசகமாய், இவைமேல் உடன்படுமெய்யான மகரம்பெற்று, 'ஓமிரண்டொன்று' என்று ஆயிற்று எனினும் அமையும். இங்கு அகாரமிட்டு, அவையுரைக்கக் காண்பும் விசேஷணத்தை [1]அதிகரித்து [2]உபஸம்ஹரிக்கக் காட்டியதாயிற்று.

இன்னும் [3]யோகவிபாகத்தாலே 'ஒன்று பொருங்கருவி' என்றது, இம்மந்த்ராநுஸிந்தநங்களில் ஏதேனும் ஒன்றே, ஆத்மஸ்வரூபப்ரகாசகமாகையாலே ஆத்மஜ்ஞாநவிரோதியான அஜ்ஞாநமடியாகவரும் அஹங்கார மமகாராதிகளாலுண்டாகிய காமாதி ஹேயகுணங்களான விரோதிகளுக்கு அவகாசமில்லாதிருக்கும்படி அவ்விரோதிகளை அவன்கையேறுசக்கரம்போல் ஒழிக்கவல்ல போர்ப்படையாம்; என்றவாறு.

இம் மந்த்ராநுஸிந்தநங்களால், இந்த யஜ்ஞவிரோதிகளான காமாதிகளுக்கு இருப்பிடமான அஜ்ஞாந அந்யதாஜ்ஞாந விபரீத ஜ்ஞாநங்கள் அழியுமாறெல்லாம் இங்கு விரித்துரைத்தல் இயலாதாதலால், அவற்றை இம்[4]மந்த்ரார்த்தநிஷ்டர்களான [5]ஆசார்யவர்யர்களிடமே கேட்டுணரத்தகும்.

இதுகாறும் கூறியவாற்றால், அஜ்ஞாநாதிகளால் அமாநித்வம் முதலான இந்த யஜ்ஞோபகரணங்கள் அழியாவண்ணம் அவனுக்காக ரஹஸ்ய த்ரயார்த்தாநுஸிந்தநம்செய்துகொண்டு இப்ரபந்நாநுஷ்டாநரூபமான யஜ்ஞத்தைக் [6]கடைபோகச்செய்துபோருவர் 'காவலன் காவலைடந்தவர்' என்பது [7]இப்பாசுரார்த்த சேஷமாயிற்று.

ஸஹஸ்ரவல்ஶம் ஸஹஸ்ரஹவி: ஸஹஸ்ராத்ரௌ ஸஹஸ்ராக்ஷம் |
ஸஹஸ்ரவ தேந ஶஶிவ்யம் ஸஹஸ்ரகிரணாயிதா ||

ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகாய நம:

---

[1] அதிகரித்து - தொடர்ந்துகூட்டி.

[2] உபஸம்ஹரித்து - முடித்து.

[3] யோகவிபாகம் - கூடிப்பிரிதல்.

[4] மந்த்ரார்த்தநிஷ்டர் - மந்திரத்தின்பொருளுணர்ந்தொழுகுமவர்.

[5] ஆசார்யவர்யர் - குரவரிற் சிறந்தோர்.

[6] கடைபோகச்செய்து - முற்றச்செய்து.

[7] பாசுரார்த்தசேஷம் - செய்யுளின் பொருட்குறை.

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது (உரையுடன்) ... ... | 0 | 4 | 0 |
| 2. | கணநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் ... ... ... | | | |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | *செளிமாதம் (உரையுடன்) ... ... ... | | | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 6 | 0 |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) .. | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 10 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 11. | *விசயராகவாசாரிய சரித்திரச்சுருக்கம் ... ... | | | |
| 12. | *பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13 | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23. | *விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமான் இரட்டைமணிமாலை... ... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை... ... ... | 0 | 8 | 0 |
| 28. | *சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | | | |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மனீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35. | *திருமந்திரநூறுபாட்டுக்குரை ... ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | | | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | [illegible] | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் | 0 | 4 | 0 |
| 46. | [illegible] | 0 | 8 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | [illegible] தமிழும் | 0 | 8 | 0 |
| 49. | *கண்டனலங்காரம் | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் தமிழ் | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில் அந்தாதி | 0 | 8 | 0 |
| 61. | கலைசைக்கோவை | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தரஞ்ஜனி | 0 | 2 | 0 |

இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:—1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்“செந்தமிழ்”ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ. 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ. 4—8—0. இதுவரை 35 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணா வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.

இனி, இரண்டொன்று என்றது, இரண்டும் ஒன்றும் மூன்ருய் மூன்று அக்ஷரங்களையுடைய ப்ரணவத்தின் [1]அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

அன்றியும், ப்ரணவம் ஒன்றும் [2]ஸகண்டநமஸ் இரண்டும் ஆக இம்மூன்றின் அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

அன்றியும், ப்ரணவம் ஒன்றும் [3]அகண்டநமஸ் ஒன்றும், நாராயணபதம் ஒன்றும் ஆக இம்மூன்றினுடைய அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

அன்றியும், பெரியதிருமந்த்ரம் ஒன்றும், த்வய பூர்வோத்தர கண்டங்கள் இரண்டும் ஆக இம்மூன்றினுடைய அர்த்தாநுசிந்தநமென்னவுமாம்.

அன்றியும், [4]தந்த்ரோச்சாரணத்தாலே, ஐந்து என்னும் எண்ணுப்பெயர் செய்யுள்விகாரத்தாலேனும் அல்வழிச்சந்தியாலேனும் ஈற்றெழுத்தும் ஈற்றயலெழுத்தும் கெட்டு ஐ என்ருய், அது இரண்டு ஒன்று என்னும் எண்ணுடன்கூடி, [5]வ்யுத்க்ரமாக்ஷர ஸங்கியையாகிய எட்டு என்னும் தொகைக்குறிப்பால் எட்டுத் திருவெழுத்துக்களையுடைய பெரிய திருமந்த்ரம் என்னவுமாம்; அதன் அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

இன்னும், தந்த்ரோச்சாரணத்தாலே, ஐயிரண்டு என்பது பத்தாய், பத்துத்திருவக்ஷரங்களையுடைய [6]த்வயோத்தரகண்டத்தைச் சொல்லுகிறதென்னவுமாம்.

இன்னும், தந்த்ரோச்சாரணத்தாலே, அவனுல் சொல்லப்பட்ட ரஹஸ்யத்ரயம் என்னும் பொருளில், 'அ + இரண்டொன்று' என்னற்பாலதுவரையறையின்மையால்யகரம்வர, அகர யகரங்கள்

[1] அர்த்தாநுசிந்தநம் - பொருளைச் சிந்தித்தல்.

[2] ஸகண்டம் - பகுக்கப்பட்டது.

[3] அகண்டம் - பகுக்கப்படாதது.

[4] தந்த்ரோச்சாரணம் - இரட்டுறமொழிதல்.

[5] வ்யுத்க்ரமம் - எதிர்நிரல்.

[6] த்வயோத்தரகண்டம் - த்வயத்தின் பின்பகுதி.